

குஜராத் கலவரங்கள்

# இந்தியாவில் ஜனநாயகம் என்னவாக இருக்கிறது?

அருந்ததி ராய்

தமிழில் : ஜி. குப்புசாமி

நன்றி : 'அவுட் லுக்'
('அவுட் லுக்' 6. 5. 2002 இதழில் வெளியான கட்டுரை)

குஜராத் கலவரங்கள்:
இந்தியாவில் ஜனநாயகம்
என்னவாக இருக்கிறது?

அருந்ததி ராய்
தமிழில் : ஜி. குப்புசாமி
முதற் பதிப்பு : மே 2002

●

ஒளி அச்சு - வடிவமைப்பு - அச்சாக்கம்:
அகம், சென்னை - 6

●

அருந்ததி ராய் உருவ ஓவியம்: சீ. வெங்கடேசன்

●

வெளியீடு:
தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்
அரசு ஊழியர் இலக்கிய வட்டம்
திருவண்ணாமலை

●

விற்பனை உரிமை:
அகம்
புது எண் 59, முதல் தளம்
அஜிஸ் முல்க் மூன்றாவது தெரு
ஆயிரம் விளக்கு, சென்னை - 600 006
agambooks@rediffmail.com
தொலைபேசி : 044 - 829 4419

●

விலை : ரூ 5 . 00



குஜராத் கலவரங்கள்

# இந்தியாவில் ஜனநாயகம் என்னவாக இருக்கிறது?

அருந்ததி ராய்

நேற்று இரவு பரோடாவிலிருந்து என் சிநேகிதி ஒருத்தி தொலை பேசியில் கூப்பிட்டாள். தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள். அவளுக்குப் பதினைந்து நிமிடங்கள் ஆயின, என்னிடம் விஷயம் என்னவென்று சொல்ல. ஒன்றுமில்லை, அவளது தோழி சயீதாவை ஒரு கும்பல் பிடித்திருக்கிறது. அவளது வயிற்றைக் கிழித்து, அதற்குள் எரிகிற கந்தல் துணி மூட்டையைச் செருகியிருக்கிறது. அவள் முழுமையாக இறந்த பின்பு அவளது நெற்றியில் 'ஓம்' என்று கிறுக்கியிருக்கிறது.

எந்த வேத நூல் இப்படிச் செய்யக் கற்றுத் தந்திருக்கிறது?

நமது பிரதம மந்திரி இவற்றையெல்லாம், கோத்ராவில் சபர்மதி எக்ஸ்பிரஸ்ஸின் 58 இந்துப் பயணிகளை முஸ்லீம் தீவிரவாதிகள் உயிரோடு கொளுத்திய நாசகாரச் செயலின் இயற்கையான பின் விளைவு என்று நியாயப்படுத்தினார். அந்தக் கொடுமையான நிகழ்ச்சி யில் இறந்த ஒவ்வொருவரும், யாரோ ஒருவரின் சகோதரனும், யாரோ ஒருவரின் தாயும், யாரோ ஒருவரின் குழந்தையும்தான்.

குரானின் எந்த இடத்தில் இப்படி உயிரோடு கொளுத்தலாம் என்று வருகிறது?

இரு தரப்பினரும் தத்தமது மத நம்பிக்கைகளின் பெயரால் மற்றவரை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருக்கையில் இவர்களுக்கிடையே இருக்கும் வித்தியாசங்கள் மறைந்து விடுகின்றன. இவர்கள் வணங்குவது ஒரே கடவுளைத்தான்; ஒரே வழிபாட்டுத் தலத்தில்தான். இரு தரப்பினருமே கொலைகாரக் கடவுளின் சீடர்கள்தாம். இப்படிப்பட்ட ஒரு சீரழிந்த சூழ்நிலையில், இவற்றையெல்லாம் துவக்கிவைத்தது யார் என்று பிரதமர் தீர்ப்பு வழங்குவது, ஒரு குறிப்பிட்ட பிரிவினரைக் குற்றம் சுமத்தி தனிமைப்படுத்துகிற பொறுப்பற்ற செயலாகும்.

இப்போது நாம் அருந்திக் கொண்டிருப்பது விஷமாக்கப்பட்ட அமுதம். மதவாத பாசிசம் அலங்கரித்த ஜனநாயகம்.

நாம் என்ன செய்ய வேண்டும்? என்ன செய்ய முடியும்?

நமது ஆளும் கட்சியில் குருதி கசிந்து கொண்டிருக்கிறது. அதனது

தீவிரவாத எதிர்ப்பு கோஷமும், 'பொடா' சட்ட அமலாக்கமும், அணு ஆயுதங்களைக் காட்டி அது பாகிஸ்தானை மிரட்டுகிற வேகத்திலும், லட்சக்கணக்கான படைவீரர்களை எல்லையில் எந்நேரமும் துப்பாக்கி விசையில் விரலைப் பதித்து நிற்க வைத்திருப்பதிலும் - இவை அனைத்தையும் விட அபாயகரமாக, பள்ளி வரலாற்றுப் புத்தகங்களை மதவயப் படுத்தி பொய்யாய் திருத்தி எழுதப்பட்டிருப்பதும் என இப்படி என்ன செய்தாலும் இக்கட்சிக்குத் திரும்பத் திரும்ப தேர்தலில் தோற்கடிக்கப் பட்டு வருவதிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை.

இக்கட்சியின் பழைய மந்திர வார்த்தையான அயோத்தி ராமர் கோவில்கூட அந்தளவிற்கு உதவ முடியவில்லை. விரக்தியின் உச்சத்தில் இருந்த இதற்கு இப்போது குஜராத் பிணிதீர்க்கும் மருந்தாகி இருக்கிறது.

பி.ஜே.பி., ஆளும் கட்சியாக இருக்கும் ஒரே பெரிய மாநிலமாக குஜராத் சில வருடங்களாகவே இருப்பதால், இந்த மாநிலம் இந்துத்துவ பாசிசம் நடத்துகிற ஒரு விரிவான அரசியல் பரிசோதனையின் சோதனைக் குடுவையாகியிருக்கிறது. இப்பரிசோதனையின் ஆரம்ப கட்ட முடிவுகள் சென்ற மாதம் பார்வைக்கு வைக்கப்பட்டன.

கோத்ராவில் வன்முறை நிகழ்ந்த ஒரு சில மணி நேரத்திற்குள் விஸ்வ ஹிந்து பரிஷத்(வி.எச்.பி)தும், பஜ்ரங் தள்ளும், துல்லியாக திட்டமிடப் பட்டதொரு தாக்குதலை - இனக்கொலையை - முஸ்லீம்கள்மீது மேற்கொள்ளத் துவங்கின. அதிகாரப்பூர்வ விபரப்படி இறந்தவர்கள் எண்ணிக்கை 800. தனிப்பட்ட அறிக்கைகள் இந்த எண்ணிக்கை 2000 என்றன. ஒன்றரை லட்சம் பேருக்கு மேற்பட்டவர்கள் தமது வீடுகளிலிருந்து துரத்தப்பட்டு தற்போது அகதிகள் முகாம்களில் இருக் கின்றனர். பெண்கள் நிர்வாணமாக்கப்பட்டு, கூட்டமாகக் கற்பழிக்கப் பட்டிருக்கிறார்கள். குழந்தைகளின் கண்ணெதிரே பெற்றோர்கள் அடித்து நொறுக்கப்பட்டிருக்கிறார்கள். 240 தர்காக்களும் 180 மசூதிகளும் அழிக்கப்பட்டிருக்கின்றன. அகமதாபாத்தில் நவீன உருதுக்கவிதை இயக்கத்தின் நிறுவனரான வாலி குஜராத்தியின் கல்லறை ஒரே ராத்திரியில் இடித்துத் தள்ளப்பட்டு நிரவப்பட்டுள்ளது. உஸ்தாத் ஃபையத் அலி கானின் கல்லறை அவமதிக்கப்பட்டு எரிகிற டயர்களால் அடுக்கப்பட்டது. கலவரக்காரர்கள் கடைகளையும், வீடுகளையும், ஓட்டல்களையும், நூற்பாலைகளையும், பேருந்துகளையும், கார்களையும் எரித்தும் சூறையாடியும் நாசப்படுத்தியிருக்கிறார்கள். ஆயிரக் கணக்கானோர் வேலைகளை இழந்துள்ளனர்.

முன்னாள் காங்கிரஸ் எம்பி. இக்பால் இஷான் ஜாஃப்ரியின் வீட்டை

ஒரு கும்பல் சூழ்ந்து தாக்கியிருக்கிறது. அவர் காவல்துறை டி.ஜி.பிக்கும், கமிஷனருக்கும், தலைமைச் செயலருக்கும், கூடுதல் தலைமைச்செயலர் (உள் துறை) அவர்களுக்கும் செய்த தொலைபேசித் தொடர்புகள் புறக்கணிக்கப் பட்டிருக்கின்றன. அவரது வீட்டிற்கு அருகேயே இருந்த போலீஸ் வேன்கள் குறுக்கிடவில்லை. அந்தக் கும்பல் வீட்டை உடைத்து உள்ளே நுழைந்து, அவரது மகள்களை நிர்வாணப்படுத்தி உயிரோடு கொளுத்தியிருக்கிறது. அதன் பிறகு இஷான் ஜாஃப்ரியின் தலையையும், கை கால்களையும் தனித்தனியாக வெட்டி எடுத்திருக்கிறார்கள். ஜாஃப்ரிதான் ராஜ்கோட் சட்டசபைத் தொகுதியின் இடைத்தேர்தல் பிப்ரவரியில் நடந்தபோது, தனது பிரச்சாரக் கூட்டங்களில் குஜராத் முதல்வர் நரேந்திர மோடியை வெகு வன்மையாக விமர்சித்துப் பேசியவர்.

குஜராத் மாநிலம் முழுவதிலும் ஆயிரக்கணக்கானோர் இது போல கும்பல் சேர்ந்து கலவரங்களில் ஈடுபட்டுள்ளனர். பெட்ரோல் பாம்கள், கத்திகள், துப்பாக்கிகள், வாள்கள், ஈட்டிகள் சகிதம் வழக்கமான வி.எச்.பி., பஜ்ரங் தள் லும்பன்களோடு தலித்துகளும், ஆதிவாசிகளும் இந்தக் கும்பலில் சேர்ந்து காட்டுமிராண்டிக் கொண்டாட்டத்தில் விளையாடி இருக்கிறார்கள். இதில் மத்திய தர வர்க்கத்தினரும் சேர்ந்து கொள்ளை களில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஒரு குடும்பம் மிட்சுபிஷி லான்சர் காரில் வந்திறங்கி கொள்ளையில் கலந்திருக்கின்றனர். இந்தக் கும்பல்களின் தலைவர்கள் கம்ப்யூட்டர் உதவியோடு தயாரிக்கப்பட்ட சர்வே லிஸ்ட்டுகளை கையில் வைத்துக் கொண்டு முஸ்லீம்களின் வீடுகளையும், கடைகளையும், அவர்கள் பங்குதாரர்களாக இருக்கிற கடைகளைக்கூட அடையாளம் காட்ட, அவை அழித்தொழிக்கப்பட்டுள்ளன. இவர்களை ஒருங்கிணைத்து செயல்படுத்த மொபைல் ஃபோன்களும், காஸ் சிலிண்டர்கள் நிரப்பப்பட்ட லாரிகளும் சில வாரங்களுக்கு முன்பாகவே தயாரிக்கப்பட்டிருக்கின்றன. இவர்களுக்குக் காவல்துறையின் பாதுகாப்பும், ஒத்துழைப்பும் இருந்தது மட்டுமல்ல, தீயணைப்புப் படையினரும் உதவியிருக்கிறார்கள்.

குஜராத் பற்றி எரிந்து கொண்டிருக்கையில், நமது பிரதமர் தனது புதிய கவிதைகளை எம். டி. வி.யில் வாசித்துக் கொண்டிருந்தார் (இந்த கேசட்டுகள் ஆயிரக்கணக்கில் விற்பதாகத் தகவல்). இவருக்கு ஒரு மாதத்திற்குப் பிறகே, மலைவாசஸ்தலங்களில் இருமுறை ஓய்வெடுத்துக் கொண்ட பின்புதான், குஜராத்திற்கு வர நேரம் கிடைத்திருக்கிறது. கடைசியாக, இவர் குஜராத்திற்கு வந்து சேர்ந்த பிறகு, திரு. மோடியை பக்கத்தில் வைத்துக் கொண்டு, ஷா ஆலம் அகதிகள் முகாமில் ஒரு

சொற்பொழிவு நிகழ்த்தினார். நடந்த நிகழ்வுகளால் தான் பாதிக்கப் பட்ட விதத்தைக் கூறுகிற முனைப்பில் அவர் உதடுகள் ஏதோ அசைந்தன. சத்தம் ஏதும் வெளிவரவில்லை. ரத்தம் சிந்தப்பட்ட, எரிந்து கொண்டிருக்கிற, உடைந்து நொறுங்கிப் போயிருக்கிற ஒரு மாநிலத்தைக் கீறிக்கொண்டு சூறைக்காற்று அடித்துக் கொண்டிருந்தது. அதற்கடுத்து பிரதமரை ஒரு கோல்ஃப் மைதானத்தில்தான் பார்க்க முடிந்தது. அதற்குப் பிறகு, வணிக ஒப்பந்தங்களில் கையொப்பமிட சிங்கப்பூருக்கு சென்றுவிட்டிருந்தார்.

குஜராத்தின் தெருக்களில் கொலைகாரர்கள் இன்றும் அலைந்து கொண்டுதான் இருக்கிறார்கள். இந்தக் கும்பல்தான் தினசரி நிகழ்வுகளைத் தீர்மானிக்கிறது. யார் யார் எங்கு வசிக்க வேண்டும்; யார் எதைப் பேச வேண்டும்; யார் யாரை எப்போது சந்திக்க வேண்டும் என்றெல்லாம் தீர்மானிப்பது இவர்கள்தாம். மதரீதியான பிரச்சனைகளிலிருந்து இவர் களது ஆதிக்கம் நிலத் தகராறு, சொத்து பிரச்சனை, குடும்பத் தகராறு, நீர்வளப் பகிர்மானம் வரை தற்போது பரவிவிட்டிருக்கிறது (மேதா பட்கர் தற்போது தாக்கப்பட்டதற்கும் இதுவேதான் காரணம்). முஸ்லீம்களின் கடைகள் மூடப்பட்டுவிட்டன. உணவகங்களில் முஸ்லீம் களுக்கு உணவு வழங்கப்படுவதில்லை. முஸ்லீம் சிறுவர்கள் பள்ளி களிலிருந்து வீட்டுக்கு அனுப்பப்படுகிறார்கள். முஸ்லீம் மாணவர்கள் தேர்வுகள் எழுத அமருவதற்கு நடுங்குகிறார்கள். முஸ்லீம் பெற்றோர்கள் தங்களது குழந்தைகள் வாய் தவறி தமது தாய்மொழியில் 'அம்மி' என்றோ 'அப்பா' என்றோ சொல்லிவிட்டு, அதனால் காட்டிக் கொடுக்கப்பட்டு கொல்லப்படுவார்களோ என்று பயத்தில் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

எச்சரிக்கை தரப்பட்டுவிட்டது; இது ஆரம்பம்தான்!

இத்தனை நாள் நம்மை இவர்கள் நம்பவைத்துக் கொண்டிருந்த இந்து ராஜ்ஜியம் என்பது இதுதானா?

முஸ்லீம்களுக்கு இந்தமாதிரி சரியான பாடம் புகட்டி, அவர்களை வைக்க வேண்டிய இடத்தில் வைத்த பின்பு, நாடு முழுக்க பாலும் கோக்கோ கோலாவும் பெருகி ஓடுமா? ராமருக்கென்று ஒரு கோவிலைக் கட்டிய பின்பு, ஒவ்வொருத்தர் முதுகிலும் சட்டையும், வயிற்றில் ரொட்டியும் இருக்குமா? கண்ணீர் சிந்துகிற விழிகள் துடைத்து விடப்படுமா? அடுத்த வருடம் இதற்கான முதலாண்டுக் கொண்டாட் டங்கள் இருக்குமென நாம் நம்பலாமா? இதற்கடுத்து வெறுக்கப்பட

வேண்டியவர்கள் பட்டியல் தயாரா? ஆதிவாசிகள், பௌத்தர்கள், கிருத்து வர்கள், தலித்துகள், பார்ஸிகள், சீக்கியர்கள் என்ற அகர வரிசைப்படியா? ஜீன்ஸ் போடுகிற, அல்லது ஆங்கிலத்தில் பேசுகிற அல்லது தடித்த உதடுகளும், சுருண்ட முடிகளும் கொண்டவர்களா? இதற்காக நாம் காத்திருக்கத் தேவையில்லை. ஏற்கனவே துவங்கியாகிவிட்டது. இப்போது வழக்கமாகிவிட்ட இந்தச் சடங்குகள் தொடரும்தானே? மக்களை சிரச்சேதம் செய்து, அவர்கள் கைகால்களைத் துண்டித்து, அவர்கள் மேல் சிறுநீர் கழித்து, கர்ப்பிணிகளின் வயிறுகள் கிழிக்கப்பட்டு, கருவை வெளியில் பிடுங்கி எடுத்து தீயில் போட்டுப் பொசுக்கி... (கற்பனை செய்ய முடியுமா? பல்வேறு பரந்துபட்ட மாறுபட்ட கலாச்சாரங்களின் வர்ணமயமான வித்தியாசங்களும், தனித்துவங்களும் இல்லாத இந்தியா கல்லறை போலவும், சுடுகாட்டைப் போல நாற்றமடிக்கும் இடமாகவும் அல்லவா இருக்கும்?)

கடந்த வாரங்களில் குஜராத்தில் கொல்லப்பட்ட அனைவருக் காகவும் - அது யாராக இருப்பினும், எவ்வாறு கொல்லப்பட்டிருப்பினும் - நாம் அஞ்சலி செலுத்தத்தான் வேண்டும். இப்போதெல்லாம் பத்திரிகை களிலும், நாளிதழ்களிலும் நூற்றுக்கணக்கான வாசகர் கடிதங்கள் வருகின்றன. கோத்ராவில் சபர்மதி எக்ஸ்பிரஸ் கொளுத்தப்பட்ட அக்கிரமமான செயலை, இந்த போலி மதச்சார்பற்ற அறிவாளர்கள் இதே உக்கிரத்தோடு ஏன் கண்டிக்கவில்லை என்று. இவர்களுக்கு ஒன்று புரியவில்லை. இப்போது குஜராத் முழுக்க நடைபெறுகிற மதப் படுகொலைகளுக்கும், சபர்மதி ரயில் எரிப்பிற்கும் அடிப்படையாகவே ஒரு வித்தியாசம் இருக்கிறது. கோத்ராவில் நடந்ததைச் செய்தவர்கள் யார் என்று தெளிவாக இன்றுவரை தெரியவில்லை. நமது அரசு இதை (எந்தவொரு நூலிழை ஆதாரமுமின்றி) ஒரு ஐ.எஸ்.ஐ. சதி என்றது. தனிப்பட்ட ஆய்வுகள் ஒரு ரௌடிக் கும்பல்தான் தீ வைத்ததாகச் சொல்கின்றன. எந்த வகையில் பார்த்தாலும் இது ஒரு கிரிமினல் குற்றம். ஆனால் குஜராத்தில் இப்போது நடக்கிற விஷயங்கள் குறித்து நியாயமான, தனிப்பட்ட ஆய்வுகள் ஆராய்ந்து சொல்வதெல்லாம் - அரசு சொல்கிற மாதிரி இயல்பான பதிலடி அல்ல - மாநில அரசே முன்நின்று, அரசு எந்திரத்தின் முழு ஒத்துழைப்போடு நடத்துகிற மதப்படுகொலைகள் இவை. எப்படிப் பார்த்தாலும் இந்த மாநில அரசின்மேல் கிரிமினல் குற்றம் சுமத்தப்பட வேண்டியதுதான். இந்த மாநில அரசு, பொது மக்கள் சார்பாகத்தான் செயல்படுவதாக பறை சாற்றுகிறது. இதன் மூலம் குஜராத்தின் மதப்படுகொலைகளுக்கு நானும் உடந்தை என்று என்னை ஒப்புக்கொள்ள இந்த அரசு வற்புறுத்துகிறது. இதுதான் - இதுதான்

எனக்கு வெறியேற்றுகிறது. இதுதான் இருவேறு படுகொலைகளையும் வேறுபடுத்துகிறது.

●

குஜராத் படுகொலைகள் துவங்கிய பிறகு பெங்களூரில் நடந்த ஆர்.எஸ்.எஸ் கூட்டத்தில், பெரும்பான்மை மக்களின் நன்மதிப்பைப் பெற முஸ்லீம்கள் முயற்சிக்க வேண்டும் என அறிவுரைக்கப்பட்டது. கோவாவில் நடைபெற்ற பி.ஜே.பி.யின் தேசிய செயற்குழுவில் நரேந்திர மோடிக்கு ஒரு ஹீரோவிற்கான வரவேற்பு தரப்பட்டது. அவர் போலித்தனமாகவும், சுயமைத்தனத்தோடும், முதல்வர் பதவியிலிருந்து ராஜினாமா செய்யத் தான் தயார் என்று அறிவித்தபோது, அது ஒரு மனதாக நிராகரிக்கப்பட்டது. இவர் தனது சமீபத்திய பொதுக்கூட்டம் ஒன்றில் கடந்த வாரங்களில் நடந்து வருகிற குஜராத் சம்பவங்களை, காந்தியின் தண்டியாத்திரையோடு ஒப்பிட்டுப் பேசியிருக்கிறார். இவரைப் பொருத்தவரை இந்த இரண்டுமே சுதந்திரப் போராட்டத்தின் முக்கியமான நிகழ்வுகளாம்.

இவர்கள் தற்கால இந்தியாவை, போருக்கு முந்தைய ஜெர்மனியோடு ஒப்பிட்டுப் பேசுகையில் நமக்கு சிலீரென்று இருந்தாலும், ஆச்சரியமாக இல்லை (ஆர்.எஸ்.எஸ்.ஸின் நிறுவனர்கள் ஹிட்லரை வெளிப்படையாகவே பாராட்டி எழுதியிருக்கின்றனர்). ஒரே வித்தியாசம் என்னவென்றால் நம் நாட்டில் ஒரு ஹிட்லர் இல்லை. அதற்குப் பதிலாக ஒரு நடமாடும் சிம்ஃபொனிக் ஆர்கெஸ்ட்ரா இங்கு இருக்கிறது. பல்வேறு தலைகளும், கைகளும் கொண்ட சங்கப் பரிவார் - பி.ஜே.பி., ஆர்.எஸ்.எஸ்., வி.எச்.பி., பஜ்ரங் தள் என்று ஒவ்வொன்றும் ஒவ்வொரு வாத்தியங்களை வாசித்தபடி அற்புதம் நிகழ்த்துகின்றன. இதன் மேதமை என்னவென்றால் அனைவருக்கும், எல்லாக் காலத்திற்கும், எல்லா விஷயங்களுக்கும் பொருத்தமான ஒரு முகத்தை இது வைத்திருப்பதுதான்.

கண்டிப்பான, மிரட்டுகிற குரலோடு ஒருவர் உள்துறைக்கு ; ஒரு நளினமான மனிதர் வெளியுறவுக்கு ; தொலைக்காட்சி விவாதங்களுக்கு மென்மையாக ஆங்கிலம் பேசுகிற ஒரு வக்கீல்; ஈவிரக்கமில்லாத ஒருவர் முதலமைச்சர்; இனப்படுகொலையை நேரடியாகக் கவனித்துக்கொள்ள பஜ்ரங் தள், வி.எச்.பி.யின் செயல் வீரர்கள். இந்தப் பல தலைகள் கொண்ட விசித்திர ஜந்துவுக்கு ஒரு பல்லியின் வாலும் இருக்கிறது. ஆபத்தில் சட்டென்று உதிர்த்துவிட்டு ஓடிப்போய் மறுபடியும் வளர்ந்து விடுகிற வால். ஒரு சோஷலிஸ்ட் மாதிரி தோற்றமளிக்கிற பாதுகாப்பு அமைச்சரும்

உண்டு. இவருக்கு வேலை, எங்கெங்கெல்லாம் தீவிரமான சிதைவுகள் ஏற்படுகிறதோ - போர்கள், புயல்கள், இனப்படுகொலைகள் - அங்கெல்லாம் சென்று அதைப் பூசி மெழுகுகிற பணி. எந்த நேரத்தில் எந்த பட்டனை அழுத்த வேண்டுமென்ற நெளிவு சுழிவெல்லாம் இவருக்கு அத்துபடி.

சங்கப் பரிவாருக்கு பல நாக்குகள். ஒவ்வொன்றும் ஒரே நேரத்தில் ஒன்றுக்கொன்று முரணான பல விஷயங்களையும் பேசும். இந்தத் திரிசூலத்தின் ஒரு தலை (வி.எச்.பி.) தனது இலட்சக்கணக்கான வீரர்களை கடைசிப் போருக்குத் தயாராக இருக்க உத்தரவிடுகிற அதே வேளையில் இதன் முதன்மைத்தலை (பிரதமர்) இந்த நாட்டின் அனைத்து தரப்பினரும், மத வேறுபாடின்றி சமமாகவே கருதப்படுவர் என்று சூளுரைக்கும். அதனையடுத்து புத்தகங்களை, திரைப்படங்களைத் தடை செய்யும்; ஓவியங்களை எரிக்கும்; எதற்கு? இந்தியக் கலாச்சாரத்தை அவமதித்ததால். அதே வேளையில் கிராமப்புற வளர்ச்சிக்கான பட்ஜெட்டின் அறுபது சதவீத தொகையை என்ரானின் லாபமாக அடமானம் வைக்கும். பல்வேறு அரசியல் அபிப்பிராயங்கள் கொண்டவர்கள் இதற்குள் உண்டு. சாதாரணமாக இரு வேறுபட்ட கருத்துகள் கொண்ட கட்சிக்காரர்களுக்கு இடையே பொதுவில் நடக்கும் சச்சரவுகள் எல்லாம் இங்கு குடும்பத் தகராறுகள்தான். எவ்வளவு அசிங்கமான தகராறும் எல்லார் முன்னிலையிலும் பொதுவாகத்தான் நடக்கும். எப்போதுமே சுமூகமாக முடிந்துவிடும். பார்வையாளர்களுக்கும் கொடுத்த காசுக்கு கோபம், ஆக்ஷன், பழிவாங்கல், சதி, பச்சாதாபம், கவிதை, எக்கச்சக்கமான கோரம்... என எல்லாவற்றையும் பார்த்த முழு திருப்தி. இந்த எல்லா ரணகளத்திற்கும், சப்தத்திற்கும், ஓலத்திற்கும் அடியில் ஒரு தனித்த இதயம் துடித்துக் கொண்டிருக்கிறது. காவிச் சாயம் தோய்ந்த ஒரு தொலைதூரக் கண்ணோட்டம் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்கிறது.

இதற்கு முன்பும் பல மதப்படுகொலைகள் இந்தியாவில் நடந்துள்ளன. குறிப்பாக 1984இல் இந்திராகாந்தியின் படுகொலைக்குப் பிறகு, காங்கிரஸ் கட்சி, டெல்லியில் சீக்கியர்களுக்கெதிரான வேட்டையைத் தலைமை தாங்கி நடத்தியது. ஏறக்குறைய குஜராத் சம்பவங்களுக்கு ஈடான கோரம் அது. அழகான சொற்பிரயோகம் ராஜீவ் காந்திக்கு எப்போதும் கைகூடி வருவதில்லை. அவர் சொன்னார் "பெருமரம் ஒன்று சாய்கிறபோது சுற்றியுள்ள நிலம் அதிரத்தான் செய்யும்" என்று. 1985இல் அனுதாப அலை சுழன்றடித்துப் பாய்ந்து காங்கிரஸ் அபார வெற்றி பெற்றது. 18 வருடங்கள் கழிந்துவிட்டன. இன்னும் ஒருவர்கூட தண்டிக்கப்படவில்லை.

அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த எந்த ஒரு விஷயத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள் - அணு ஆயுத சோதனை, பாபர் மசூதி, டெஹல்கா விவகாரம், தேர்தலுக்காக உசுப்பி விடப்படுகிற சாதிக் கலவரங்கள் - அனைத்திலுமே காங்கிரஸ் எப்போதிருந்தோ இருந்து வருகிறது. இவை ஒவ்வொன்றிலும் காங்கிரஸ்தான் விதையைத் தூவி வந்திருக்கிறது. பி.ஜே.பி. இந்த நாராசத்தை அறுவடை செய்கிறது. எனவே நாம் வாக்களிக்கச் செல்லும்போது இந்த இருவருக்கும் இடையே எந்தவொரு வித்தியாசமாவது இருப்பதாகத் தெரியுமா? இதற்கான பதில் தப்பு என்றாலும் உண்மை என்னவென்றால் 'ஆம்' என்பதுதான். ஏனென்றால் காங்கிரஸ் இது போன்ற பல பாவங்களைப் பல்லாண்டுகளாகச் செய்த ஒரு கட்சியாக இருந்த போதிலும், அது ராத்திரி நேரத்தில், கோழைத்தனமாகவும், திருட்டுத்தனமாகவும், போலித்தனமாகவும், அவமான முகத்தோடும் செய்த காரியங்களை, பி.ஜே.பி. பட்டப்பகலில் கூச்சமில்லாமல் பெருமிதத்தோடு செய்கிறது. இதுதான் முக்கியமான வித்தியாசம்.



மத துவேஷத்தை ஊக்குவிப்பது என்பது சங்கப் பரிவாரின் அடிப்படைக் கொள்கை. இது பல வருடங்களாகத் திட்டமிடப்பட்டு வந்திருக்கிறது. மெல்லக் கொல்லும் இந்த விஷம் தற்போது சமூகத்தின் இரத்த நாளங்களில் மெதுவாக செலுத்தப்பட்டு வருகிறது. தற்போது நாடெங்கும் பரவி இருக்கும் ஆர்.எஸ்.எஸ். சகாக்களும், சரஸ்வதி சிசு மந்திர்களும், ஆயிரக்கணக்கான சிறுவர்கள், இளைஞர்களின் மனத்திற்குள் மத துவேஷத்தையும் திரிக்கப்பட்ட வரலாற்றையும் புகுத்தி நச்சாக்கி வருகின்றன. இவை பாகிஸ்தானிலும் ஆப்கானிஸ்தானிலும் பரவி இருக்கிற தாலிபான்களை உருவாக்குகிற மதரஸாக்களுக்கு எந்த விதத்திலும் குறைந்தவையல்ல. குஜராத் போன்றதொரு மாநிலத்தின் காவல்துறையிலும், அரசு நிர்வாகத்திலும், ஒவ்வொரு கட்சி மட்டத்திலும் இது திட்டமிட்டு நுழைந்து வியாபித்திருக்கிறது. இதற்குப் பெரு வாரியான வரவேற்பும் இருக்கிறது. இதையெல்லாம் குறைத்து மதிப்பிட்டாலோ, தவறாக அர்த்தப்படுத்திக் கொண்டாலோ அது முட்டாள்தனம். இங்கே மொத்த அரசமைப்பும் பலமான, மத ரீதியான, கொள்கை ரீதியான, அரசியல் மற்றும் நிர்வாகப் பின்புலத்தில் இயங்கி வருகிறது. மாநில அரசின் முழுமையான ஒத்துழைப்பின்றி இத்தகைய தொரு வலிமையான கட்டமைப்பு சாத்தியமல்ல.

மதரஸாக்கள் அவசரகதியிலும், சரியான திட்டமிடலும் இன்றி, அயல் தேசங்களின் பணபலத்தில் மத துவேஷத்தைப் பரப்புவதற்குச் செயல்படுகின்றன. இவற்றுக்குள்ள பெரிய பலவீனம் என்னவென்றால் அந்நாட்டு அரசுகளின் ஆதரவின்மை.

இத்தகைய தொடர்ந்த நெருக்கடிகள், பெரும்பான்மையான முஸ்லீம் சமுதாயத்தினரை இரண்டாம் தரக் குடிமக்களாக்கி, தொடர்ந்ததொரு அச்சுறுத்தலில் வைத்திருக்கும் சிவில் உரிமைகளுக்கோ, சட்ட ரீதியான நியாயத்திற்கோ தகுதியில்லாத நிலைக்குத் தள்ளும். அதன் பிறகு அவர்களுக்கு தினசரி வாழ்க்கை எப்படி இருக்கும்? எந்தவொரு அற்பமான காரணமும் - சினிமா க்யூவில் ஏற்படுகிற சின்ன சலசலப்போ, டிராபிக் சிக்னலில் ஏற்படுகிற சச்சரவோ கூட - மரண விளைவுகளை ஏற்படுத்தும். எனவே அவர்கள் சத்தம் போடாமல் அமைதியாக இருக்கக் கற்றுக்கொண்டு, தமக்கு அளிக்கப்படுவதை முனகலின்றி ஏற்றுக்கொண்டு தாங்கள் வாழ்கிற சமூகத்தின் விளிம்பில் ஊர்ந்து போய்க் கொண்டிருக்க வேண்டும். இவர்களது பய உணர்வு, மற்ற சிறுபான்மையினருக்கும் பரவும். இதனால் பல இளைஞர்கள் தீவிரவாதத்திற்கு மாறுவார்கள். பயங்கர மான காரியங்களைச் செய்யத் தொடங்குவார்கள். நாகரிக சமுதாயம் அவர்களை வன்மையாகக் கண்டிக்கும். அதன் பிறகு ஜனாதிபதி புஷ்ஷின் பீரங்கிக் குரல் நம்மை நோக்கி வரும்: "ஒன்று எங்களுடன் இருங்கள்; அல்லது தீவிரவாதிகளோடு இருங்கள்." இந்த வார்த்தைகள் காலத்தில் உறைந்து தொங்குகின்றன. காலம் காலமாகக் கொலையாளிகளும், படு கொலையாளர்களும் உபயோகித்து வருகிற அதே சொற்றொடர்கள்...!

இப்போது கொஞ்ச நாட்களாக திரு. மோடி அவர்களால் பின்னுக்குத் தள்ளப்பட்ட திரு. பால் தாக்கரே, ஓர் இறுதித் தீர்வை முன் வைத்திருக்கிறார். அதுதான் உள்நாட்டு யுத்தம். அற்புதம். பிறகு பாகிஸ்தான் நம்மீது குண்டு வீசத் தேவையே இல்லை.

நம்மை நாமே குண்டு வீசி அழித்துக் கொள்ளலாம். இந்தியா முழுவதையும் காஷ்மீராக்கி விடலாம்; அல்லது போஸ்னியாவாக; அல்லது பாலஸ்தீனாக; அல்லது ருவாண்டாவாக. அனைவரும் காலத் திற்கும் அவதிப்படுவோம். ஒருவரையொருவர் கொல்ல விலையுயர்ந்த துப்பாக்கிகளும், வெடி மருந்துகளும் வாங்கலாம். பிரிட்டிஷ் ஆயுத டீலர்களும், அமெரிக்க ஆயுத உற்பத்தியாளர்களும், நாம் சிந்துகிற இரத்தத்தில் கொழிக்கட்டும். (புஷ் குடும்பத்தினரும் பின்லேடன் குடும்பத் தினரும் பங்குதாரர்களாக இருக்கிற) கார்லைல் நிறுவனத்திடம் தள்ளுபடி விலையில் ஆயுதங்கள் வாங்கலாம். எல்லாம் சரியான

படி சென்றால் இன்னொரு ஆப்கானிஸ்தானாக நாம் ஆகிவிடலாம் (எவ்வளவு பெரிய விளம்பரம் இதனால் நமக்குக் கிடைக்கும், யோசித்துப் பாருங்கள்!). நமது விளைநிலங்கள் முழுக்க கண்ணிவெடிகள் புதைக்கப் பட்டு, நமது கட்டிடங்கள் சிதைக்கப்பட்டு, நமது நிர்வாகக் கட்டமைப்பு நொறுக்கப்பட்டு, நமது குழந்தைகள் அங்கஹீனப்பட்டு, புத்தி சுவாதீனம் இழந்து, சுய வெறுப்பினால் நம்மை நாமே அழித்துக்கொண்ட பிறகு அமெரிக்காவின் உதவியை நாம் கோருவோம். விமானத்தில் வந்து உணவுப் பொட்டலங்கள் வீசுவார்கள். அற்புதமாக இருக்கும். உங்களுக்கு வேண்டுமா?

சுய அழிவுக்கு எவ்வளவு அருகில் வந்திருக்கிறோம் நாம்? இன்னும் ஒரு அடி. அப்புறம் அதல பாதாளம்! கோவாவில் நடைபெற்ற பி.ஜே.பி. தேசிய செயற்குழுவில், பிரதமர் வாஜ்பாய் சரித்திரம் படைத்திருக்கிறார். தனது எல்லையையும், மனசாட்சியையும் ஒருசேரத் தாண்டி, ஜார்ஜ் புஷ்ஷும், டோனால்ட் ரம்ஸ்ஃபெல்டும் கூட சொல்ல சங்கடப்படுகிற மாதிரி, முஸ்லீம்களைத் தனியாகப் பிரித்து வைத்துப் பேசிய முதல் இந்தியப் பிரதமர் ஆகியிருக்கிறார்: "முஸ்லீம்கள் எங்கே வாழ்ந்தாலும் சரி; அமைதியாக வாழ்வதை அவர்கள் விரும்புவதில்லை."

அவமானம்! ஆனால் இவர் மட்டும் இது போலப் பேசுவதாக இருந்தால் பரவாயில்லை. குஜராத் வன்முறைகளுக்குப் பின்னர், அவர்களது பரிசோதனைகளுக்குப் பிறகு, தற்போது ரொம்பவும் நம்பிக்கையோடு இருக்கிறார்கள். இப்போது ஒரு அவசரத் தேர்தல் வந்தால், பெரும் வெற்றி அவர்களுக்கு என்ற நம்பிக்கையோடு. என் பரோடா சிநேகிதி சொல்கிற மாதிரி இப்போது மென்மையிலும் மென்மையான கனவானாக இருப்பவர் கூட தனது மெல்லிய குரலில் சொல்கிறாராம்: "மோடி, எங்களுடைய ஹீரோ."

நம்மில் சிலர் அப்பாவித்தனமாக, கடந்த வார பயங்கரங்களுக்குப் பிறகாவது மதச்சார்பற்ற கட்சிகள் தங்களுக்குள் ஒன்றுபட்டு இவற்றை எதிர்க்கும் என நம்பினோம். மத்தியிலும் பெருவாரியான மெஜாரிட்டி யில் பி.ஜே.பி. இல்லை; இந்துத்துவா திட்டங்களை நிறைவேற்றுகிற அளவுக்கு அதற்கு பலமும் இல்லை. தேசிய ஜனநாயகக் கூட்டணியில் இருக்கிற இருபத்தேழு கட்சிகளில் மனசாட்சியுடைய மதச்சார்பற்ற கட்சிகள் தங்களது ஆதரவை விலக்கிக் கொள்ளும் என எதிர்பார்த்தோம். இந்தக் கட்சிகளின் அறநெறிகளுக்கும், மதச்சார்பற்ற கொள்கை உறுதிக்கும் இதைவிட உக்கிரமான சோதனை ஏற்படப் போவதில்லை என முட்டாள்தனமாக நம்பினோம்.

இன்றைய காலகட்டத்தின் அறிகுறிபோலும், ஒரு கூட்டணிக்கட்சி கூட விலகவில்லை. எல்லாருடைய கண்களிலும் ஒரு தொலைதூரக் கனவும், கணிப்பும் நிரம்பி இருக்கின்றன. விலகிவிட்டால் எந்தத் தொகுதியில் மறுபடியும் ஜெயிக்க வாய்ப்பு? விலகாமல் துணை நின்றால் எந்த இலாகா நமக்குக் கிடைக்கும்? HDFCயின் தலைவர் தீபக் பரேக்கைத் தவிர எந்தவொரு வர்த்தக நிறுவனத் தலைவரும் நடந்த கொடும் செயலுக்குக் கண்டனம் தெரிவிக்கவில்லை. தற்போது இந்தியாவில் குறிப்பிடத்தகுந்த மாதிரி மிஞ்சி நிற்கிற ஒரே முஸ்லீம் அரசியல்வாதியான ஃபருக் அப்துல்லா கூட இந்த அரசின் பக்கமே நிற்கிறார். அடுத்ததாக துணை ஜனாதிபதி பதவி தரப்படலாம் என்கிற மங்கலான நம்பிக்கை அவருக்கு. இதெல்லாவற்றையும் விடக் கொடுமை தாழ்த்தப்பட்டவர் களுக்கான தலைவராகக் கருதப்படுகிற பி.எஸ்.பி.யின் மாயாவதி, உ.பி.யில் பி.ஜே.பி.யோடு கூட்டணி அமைக்கிற முயற்சியில் இருந்து வருகிறார்.



காங்கிரஸ் கட்சியும், இடதுசாரிக் கட்சிகளும் மோடியை ராஜிநாமா செய்ய வைக்க போராட்டங்களை அறிவித்துள்ளன. என்ன இது? நமது நியாய உணர்வுகளையெல்லாம் இழந்து விட்டோமா என்ன? ராஜிநாமாவா? குற்றவாளிகள் ராஜிநாமா செய்யத்தக்கவர்கள் அல்ல. அவர்கள், குற்றம் சுமத்தப்பட்டு, விசாரணை நடத்தப்பட்டு, தண்டனை விதிக்கப்பட வேண்டியவர்கள். கோத்ராவில் ரயிலைக் கொளுத்தியவர்கள் யாரோ அவர்களும் இதேபோல் தண்டனை விதிக்கப்பட வேண்டிய வர்களே. இப்போது படுகொலைகளை சர்வசாதாரணமாகப் புரிந்து கொண்டிருக்கிற கும்பலும், இவர்களுக்குத் துணை நிற்கிற காவல் துறையும், அரசு நிர்வாகமும் இதேபோல் தண்டனை விதிக்கப்பட வேண்டியவர்களே. இத்தகைய மத துவேஷத்தைத் தூண்டிவிட்ட குற்றத்தைச் செய்தவர்கள் யாரோ அவர்களும். உச்ச நீதிமன்றத்துக்கு மோடியையும் பஜ்ரங் தள்ளையும் சுயமாகத் தண்டிக்க உரிமை இருக்கிறது (நீதிமன்றமே குற்றச்சாட்டு சுமத்தலாம்). நூற்றுக்கணக்கான ஆவணங்கள் இருக்கின்றன. ஏராளமான சான்றுகளும் இருக்கின்றன.

ஆனால் இந்தியாவில் நீங்கள் ஒரு கொலைகாரனாகவோ, மதப் படுகொலைகள் புரிபவனாகவே இருந்தால் கூட, நீங்கள் ஒரு அரசியல் வாதியாகவும் இருந்தால் எதுவும் நேராது. ஒரு அரசியல்வாதி தண்டிக்கப் படுவார் என யாரும் நம்புவது கூடக் கிடையாது. மற்ற அரசியல்வாதிகள்

கூட, மோடியும் அவரது குண்டர் படையும் தண்டிக்கப்பட வேண்டு மென ரொம்பவும் உறுதியாகப் போராடினால், தங்களுடைய கடந்த காலப் பாவங்களும், இருண்ட பகுதிகளும் தோண்டி எடுக்கப்படும் என்ற பயத்தில், வெற்றுக் கூச்சலிட்டு பாராளுமன்றத்தை ஸ்தம்பிக்கச் செய்கிற காரியத்தில் மட்டுமே ஈடுபடுகிறார்கள். உடனே அதிகாரத்தில் இருப்பவர்கள் ஒரு கமிஷனை உருவாக்கிவிட்டால் போதும்; அது தன் பாட்டுக்கு பல வருடங்களுக்கு உருண்டு கொண்டிருக்கும்.

ஏற்கனவே இந்த விவகாரம் வேறுமாதிரி உருக்கொள்ள ஆரம்பித்து விட்டது. தேர்தல் நடத்த அனுமதிக்கப்படுமா? தேர்தல் ஆணையம் என்ன மாதிரி முடிவெடுக்கும்? அல்லது உச்ச நீதிமன்றம்? எப்படியிருப்பினும் - தேர்தல் நடைபெற்றாலும், தள்ளிப் போடப்பட்டாலும் - மோடி மாதிரி ஒரு அரசியல்வாதியை சுதந்திரமாக நடக்கவும், தனது அரசியல் பணியைத் தொடரவும் அனுமதிக்கிற ஜனநாயக முறையின் அடிப்படைக்கொள்கைகள் இருக்கிறதே, இவை நமது மிகப்பெரிய பலமாக இருக்கிற ஜனநாயகத்தின் அறநெறிகளைப் புரட்டிமட்டும் போடவில்லை; சிதைக்கவும், அதையே ஜனநாயகத்தின் எதிரியாகவும் ஆக்குகிறது. இந்த மாதிரியான ஜனநாயகம் தான் நமது பிரச்சனையே. தீர்வு அல்ல. இப்படியிருக்க, நமது ஜனநாயகத்தை ஆழப்படுத்தவும், செழுமைப்படுத்தவும் எடுக்கிற முயற்சிகளால் என்ன பிரயோஜனம்? ஜனநாயகத்தை வளைத்தும், மடக்கியும் அது என்னவென்றே அடையாளம் காண முடியாத அளவுக்கு அதை மாற்றிய பிறகு?

பி.ஜே.பி. தேர்தலில் ஜெயித்துவிட்டால் என்ன ஆகும்? (பாகிஸ்தான் மீது ஒரு போரைத் துவக்கிவிட்டால் வாக்குகளை சுலபமாகத் தட்டி விடலாம் என்பது பி.ஜே.பி.யின் கணக்காம்). ஜார்ஜ் புஷ்ஷிற்குக் கூட பயங்கரவாதத்திற்கெதிரான போருக்குப் பிறகு 80 சதவீத ஆதரவு கூடியிருக்கிறதாம். ஏரியல் ஷாரோனுக்கும் அப்படியே.

இது இவ்வளவு சுலபமானதொரு விஷயமாக இருக்க, எதற்குத் தேவையில்லாமல் சட்டமுறைகளும், அரசியல் அமைப்புச் சட்டமும்; பத்திரிகை, அப்புறம் இந்த அறநெறிகள் என்கிற சமாச்சாரம், எல்லாவற்றையும் வீசி எறிந்துவிட்டு, இவற்றையெல்லாம் ஏன் வாக்கெடுப் புக்கு விடக்கூடாது? இனப்படுகொலைகள், தேர்தல் கோஷங்களாகலாம். மதக் கொலைகள், விற்பனை பிரச்சாரங்களாகலாம்..

பாசிசத்தின் உறுதியான காலடிச்சுவடு இந்தியாவில் பதிக்கப்பட்டு விட்டது. தேதியைக் குறித்துக் கொள்ளுங்கள்: 2002ஆம் வருடத்தின் வசந்த

காலம். இதில் நமக்கு அனுசரணையான சர்வதேச வானிலை திகழ்வதற்குக் காரணமாக இருந்த அமெரிக்க அதிபரின் பயங்கரவாதத்திற்கெதிரான போருக்கு நாம் நன்றியுடையவர்களாக இருந்தபோதிலும், முழு மதிப்பெண்ணையும் இதற்கே தந்துவிட முடியாது. இத்தனை வருடங்களாக தனிப்பட்டும், பொதுவிலும் உறங்கிக்கொண்டிருந்த வெறுப் புணர்வை மங்கவிடாமல் பார்த்துக் கொண்ட அனைவருக்கும் இதில் பங்குண்டு.

இது, 1998இல் பொக்ரான் அணு ஆயுத சோதனைக்குப் பிறகு வேகம் கொள்ள ஆரம்பித்தது. இதற்குப் பிறகு இரத்த ருசி கொண்ட தேசிய வெறி, தாய்நாட்டுப் பற்று என்பது, உடனடி அரசியல் பலனளிக்கிற உத்தியாகவும் கண்டெடுக்கப்பட்டது. 'அமைதியின் ஆயுதம்' என்பது இந்தியாவையும் பாகிஸ்தானையும் மிரட்டல் - எதிர்மிரட்டல், வெறுப் பேற்றல் - எதிர் வெறுப்பேற்றல் என்கிற ஒரு சுழலுக்குள் சிக்க வைத்திருக்கிறது.

ஒரு போருக்கும், நூற்றுக்கணக்கானோர் இறந்ததற்கும், இலட்சக் கணக்கான படைவீரர்கள் எல்லையில் எதிர் எதிரே ஒருவர் கண்ணுக்குள் ஒருவர் முறைத்தபடி நிற்கவைத்திருப்பதற்குப் பிற்பாடும் இது தொடர்கிறது. பாகிஸ்தானுக்கெதிராக வளர்த்து விடப்பட்டிருக்கிற வெறுப் புணர்வு, எல்லையிலிருந்து கிளம்பி நமது இயக்கங்கள் அனைத்திற்குள்ளும் நுழைந்து விட்டிருக்கிறது. மத நல்லிணக்கம், சகிப்புத்தன்மை, இந்து - முஸ்லீம் சமுதாயத்தினருக்கு இடையே இருந்து வந்த நட்புணர்வு இவையெல்லாவற்றையும் கூரிய கத்தியால் கிழித்தபடி, நமக்குள்ளே வெறியுணர்வைத் தூண்டுகிறது. இத்தனை வருடங்களாக நரகத்தின் கடவுளர்கள் நமது மக்களின் அபிமானத்தைப் பெற்றிருக்கவில்லை; இப்போது அவர்களை நாம்தாம் வரவழைத்திருக்கிறோம். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே எப்போதெல்லாம் மோதல் அதிகரிக்கிறதோ, அப்போதெல்லாம் இங்கே முஸ்லீம்களுக்கெதிரான கொடுமைகள் தலைதூக்குகின்றன. பாகிஸ்தானுக்கெதிராக போர் கூச்சல் எழுப்பப் படுகிற போதெல்லாம், நம்மீது நாமே புதிய காயங்களை ஏற்படுத்திக் கொள்கிறோம். நமது அற்புதமான கலாச்சாரப் பிரிவுகளையும், அவற்றுக்கிடையேயான வேறுபாடுகளையும் நமது பெருமையாக நினைத்திருந்த நாம், இப்போது தேசிய வாதம் என்றால் அது இந்துயிஸம் என்று புரிந்து கொள்ளத் துவங்கியிருக்கிறோம். இந்துயிஸம் என்பது பிற மதங்களை வெறுக்கிற, பாகிஸ்தானை மட்டுமல்ல முஸ்லீம்களை வெறுக்கிற வாதம். தேசிய வாதம் என்பது எவ்வளவு சுலபமாக

பாஸிஸமாக மாறிவிடுகிறது! இந்த தேசம் எப்படி இருக்க வேண்டுமென பாசிஸ்டுகள் தீர்மானிப்பதை நாம் அனுமதிக்கக் கூடாத அதே வேளையில், இத்தகைய தேசியவாதங்கள் (சோஷலிஸ்ட், காபிடலிஸ்ட், பாசிஸ்ட்) இருபதாம் நூற்றாண்டில் நடைபெற்ற அனைத்துப் படுகொலைகளுக்கும் ஆணி வேராக இருந்தவை என்பதை நினைவு கொள்ள வேண்டும். தேசியவாதம் என்ற விஷயத்தை நாம் கவனத்தோடு கையாள வேண்டும்.

ஒரு தொன்மையான நாகரிகத்தைச் சேர்ந்தவர்கள் நாம் என்பதை மறந்து, புதிதாகத் துவக்கப்பட்ட ஒரு நாட்டோடுதான் நம்மை அடை யாளம் கண்டுகொள்ளப் போகிறோமா? தேசத்தை நேசிக்கப் போகிறோமா, அல்லது ஒரு நிலப் பகுதியை ராணுவத்தின் மூலம் கண்காணிப்பதே நமது வேலை என்று இருக்கப் போகிறோமா? சங்கப் பரிவாரங்களுக்கு நாகரிகம் என்பதெல்லாம் புரிந்து கொள்ள முடியாத விஷயம். நாம் யாராக இருந்தோம், யாராக இருப்பதாக அறிந்திருக் கிறோம், நம் கனவுகள் என்ன, யாராக இருக்க விரும்புகிறோம் என்பதை யெல்லாம் அவர்கள் சுருக்கியும், குறைத்தும், வரையறுத்தும், அங்கஹீனப் படுத்தியும், நம் ஞாபகங்களை சிதைத்தும் தீர்மானிக்க முனைகிறார்கள். எந்த மாதிரியான இந்தியாவை அவர்கள் விரும்புகிறார்கள்? கை கால்களற்ற, தலையற்ற, ஆன்மாவற்ற முண்டத்தையா? கொலைவாளில் இரத்தம் சொட்ட, இந்தியாவின் சிதைக்கப்பட்ட இதயத்தில் அவர்களது கொடியை ஊன்ற நாம் அனுமதிக்கப் போகிறோமா? இல்லை, இது நிகழ ஏற்கனவே அனுமதித்து விட்டோமா?



இத்தகைய தவழ்கிற நிலையில் உள்ள பாசிசத்தை, சில வருடங் களாகவே நமது ஜனநாயக நிறுவனங்கள் பலவற்றிற்குள் வளர்க்க முற்பட்டு விட்டோம். நாடாளுமன்றம், பத்திரிகை, காவல்துறை, நிர்வாகம், பொதுமக்கள், ஏன் 'மதச்சார்பற்றவர்கள்' கூட இந்த நிலைக்கு ஆரம்ப வித்திட்டிருக்கிறார்கள். எந்த ஒரு ஜனநாயக நிறுவனத்திற்காகவும் நாம் ஆதரவாகப் பேச முற்படுகையில் - அது எந்த நிறுவனமாகவும் இருக்கட்டும், உதாரணமாக உச்ச நீதிமன்றம் - அதன் செயல்பாடுகளை விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதாகவும், அதனை எதிர்க்கும் உரிமையை மக்களுக்கு மறுத்தும், தொட இயலாத புனிதமாக எதுவொன்றை மாற்றுகிறபோதும், பாசிசத்தை நோக்கி நாம் நகர ஆரம்பிக்கிறோம். இந்த

ஆரம்ப அறிகுறிகளைப் பலர் அடையாளம் கண்டுகொள்ளவே இல்லை என்பதையும் நியாயமாகக் குறிப்பிட வேண்டும்.

நமது பத்திரிகைகள் ஆச்சரியகரமான தைரியத்தோடு கடந்த வார வன்முறைகளை எதிர்த்து வருகின்றன. பி.ஜே.பி.யின் உறுதியான பத்திரிகைக் கூட்டாளிகள் கூட குஜராத் என்று முன்பு அழைக்கப்பட்ட இன்றைய நரகத்தின் அதல பாதாளத்தைக் கண்டு உண்மையான அதிர்ச்சியோடு தலையைத் திருப்பிக் கொள்கிறார்கள். ஆனால் இவர்கள் எத்தனை காலத்திற்கு, உறுதியோடு இவற்றையெல்லாம் எதிர்த்து நிற்கப்போகிறார்கள்? இதுவெல்லாம் ஏதோ ஒரு கிரிக்கெட் சீஸன் ஆரம்பிப்பதற்கு முன்னால் வெளியிடுகிற விளம்பர பிரச்சாரம் ஒன்றும் அல்ல. சுவாரஸ்யமான செய்திகளாகத் தொடர்ந்து வெளியிடுகிற அளவுக்கு இந்த ரணகளத்தில் ஏதும் இல்லை. பாஸிஸம் என்பது, மெதுவாகவும், தொடர்ந்தும் நமது இயக்கங்களில் எல்லாம் புகுந்து வியாபிக்கிற ஓர் அரசு சார்ந்த வன்முறை. மெதுவாக சீரழிக்கப்படுகிற சிவில் உரிமைகள்; தினசரி நிகழ்வாகிப் போகிற அநீதிச் சம்பவங்கள்; இவற்றில் எல்லாம் பரபரப்பாக, உரத்த குரலில் கதறுகிற செய்திகள் ஏதுமில்லை. இந்த பாசிச ஆதிக்கத்தை எதிர்ப்பது என்பது மக்களின் உணர்வையும், அறிவையும் எழுப்புவதாகும். ஆர்.எஸ்.எஸ்.ஸின் சகாக்களையும், மதரஸாக்களையும் தடை செய்யுமாறு கோருவது எதிர்ப்பில் அடங்காது. எதிர்ப்பது என்றால், தன்னிச்சையாகவே இவற்றையெல்லாம் நம் மக்கள் ஒதுக்குகிற காலம் வரும் வரை, அதை நோக்கி முன்னெடுத்துச் செல்வதுதான். கொஞ்சம் தரையில் காதை வைத்துக் கேளுங்கள். உண்மையாகவே எந்தவொரு சக்தியோ, பலமோ அற்றவர்களின் பல்வேறு வித முனகல்கள் கேட்கும். அதற்கெல்லாம் உங்கள் பத்திரிகைகளில் மேடை அமைத்துக் கொடுங்கள். நூற்றுக் கணக்கான, உண்மையான பாசிச எதிர்ப்பாளர்கள் பல்வேறு தளங்களில் இந்த நாடு முழுக்க நடக்கும், நிஜமான, ஆம் நிஜமான விஷயங்களைப் பற்றிக் கூறுவார்கள். கொத்தடிமைகள், திருமணக் கற்பழிப்பு, பெண்சிசு அழிப்பு, பெண் தொழிலாளர்களின் கூலி, யுரேனிய குப்பை, நிலப் பாறைகளைக் கட்டுப்பாடின்றி தகர்த்தல், நெசவாளர்களின் துயரம், உழவர்களின் கவலைகள்… இது போன்று பல. நியாயமற்ற பொருள் குவிப்பையும், நியாயமில்லா பொருளின்மையையும், அவநம்பிக்கையையும் அவமானத்தையும் மட்டுமே கொண்டிருக்கிற ஏழ்மையையும், அதற்கு எதிராகத் தொடர்ந்து வருகிற வன்முறைகளையும் வெளிச்சமிட்டு நம் பத்திரிகைகளும், ஊடகங்களும் காட்டவேண்டும். நமது பத்திரிகைகளின் 'பத்தி(column)களிலும், டி.வி.க்களின் பிரதான நேர நிகழ்ச்சிகளிலும், இது

போன்ற நிஜமான அவலங்களெல்லாம், நமது பார்வைக்கு வந்துவிடக் கூடாதென்ற முனைப்போடு நம் கவனத்தைத் திசை திருப்ப வருகிற வெற்றுக் கேளிக்கை சமாச்சாரங்களையும், அசட்டுக் கூத்து விவகாரங் களையும் எதிர்ப்பதுதான் உண்மையான பத்திரிகைகளின் கடமையாகும்.

குஜராத் சம்பவங்களுக்காக நமது நாட்டின் பெரும்பான்மையோர் அதிர்ந்து போயிருந்தாலும், மூளைச்சலவை செய்யப்பட்டு, வேறு எதிலும் பார்வையோ நம்பிக்கையோ பட்டுவிடாத பல நூற்றுக்கணக்கான பேர்கள் இந்த அவலத்தின் ஆணிவேர் வரை சென்று பார்க்க காக்கி நிக்கரோடும், காவிக் கொடிகளோடும் சிறு பூங்காக்கள், மைதானங்கள், கிராமசபைகள் எங்கும் தென்படுகிறார்கள். எங்கேயோ நடந்து போய்க் கொண்டே இருக்கிறார்கள். எங்கே? எதற்காக? இவர்களது சரித்திரம் குறித்த அறிவின்மையும், அக்கறையின்மையும் இந்த 'மாதிரியான பாசிச கும்பல் களுக்கெல்லாம் நீண்ட ஆயுள் கிடையாது என்ற உண்மையை அவர்கள் கண்களுக்குத் தெரியாமல் மறைக்கிறது. தனது பிறவியிலேயே பொதிந்திருக்கிற முட்டாள்தனத்தால், கொஞ்சநாட்கள் தலைதூக்கித் திரிந்துவிட்டு, பிறகு அது தன்னையே அழித்துக் கொள்ளும் என்கிற உண்மையைப் புரிந்து கொள்ள இயலாத தடித்த தோலர்கள் இவர்கள். துரதிருஷ்டவசமாக, அணுக்கதிர் வீச்சினைப்போல பாதி ஆயுள்தான் இதற்கும்; இனி வரும் பல தலைமுறைகளை இவை முடமாக்கிப்போடும்.

இம்மாதிரியான வெறியும், வெறுப்பும் அத்தனை சுலபத்தில், பொது மக்களின் எதிர்ப்பால், அடங்கியோ, குறைந்தோ போகாது. சகோதரத்துவ கீதங்கள் கேட்க அற்புதமாகத்தான் இருக்கின்றன. ஆனால் போதாது.

வரலாற்றுப் பூர்வமாகப் பார்த்தால், பாசிச இயக்கங்கள், ஒரு தேசத்தின் விரக்தியாலும், தெளிவின்மையாலும்தான் வளர்ந்து வந்திருக் கின்றன. நமது நாட்டின் விடுதலைப் போராட்டம் கிளப்பிவிட்ட பல அற்புதக் கனாக்கள், பிற்பாடு சிதறடிக்கப்பட்ட போதுதான் இங்கேயும் பாசிசம் உருவாகத் துவங்கியது.

பிரிவினைக்குப் பின் நமக்குக் கிடைத்த, குருதி படிந்த சுதந்திரத்தை காந்தி 'மரத்தாலான ரொட்டித் துண்டு' என்று வர்ணித்தார். ஐம்பதாண்டு காலம் ஆன பின்னாலும், வெறுப்பும், பரஸ்பர அவநம்பிக்கையும், இரு தரப்பினரிடையேயும் அதிகப்படுத்தப்பட்டே வந்திருக்கின்றன. இந்திரா காந்தி முதற்கொண்டு நமது அரசியல்வாதிகள் அனைவரும் இந்தப் பணியை நம்மிடம் தொடர்ந்து ஆற்றி வந்திருக்கின்றனர். நமது பாராளுமன்ற ஜனநாயகத்தின் ஜவ்வினை ஒவ்வொரு அரசியல் கட்சியும் தேர்தல் ஆதாயத்திற்காக சுரண்டிக் கொண்டேதான் இருக்கின்றன.

கரையான்கள் தமது புற்றுக்குள்ளே சுரங்கப் பாதைகளையும், நிலத்தடி கால்வாய்களையும் சுரண்டிச் சுரண்டி அகழ்கிற மாதிரி, நமது அரசியலமைப்புச் சட்டத்தையும், பாராளுமன்றத்தையும், நீதிமன்றத் தையும் இணைக்கிற அஸ்திவாரத்தையும், முதுகெலும்பையும் சுரண்டி உள்ளீடற்று ஆக்கி வைத்திருக்கின்றன. இந்நிலையில் அரசியல்வாதிகளை மட்டும் இதற்கெல்லாம் குற்றம் சுமத்துவதும், அவர்களிடம் இல்லாத அறநெறிகளை எதிர்பார்ப்பதும் நியாயமல்ல. எதற்கெடுத்தாலும் மக்களால் குற்றம் சுமத்தப்படுகிற அரசியல்வாதிகளும் ஒரு வகையில் பரிதாபத்திற்குரியவர்களே. அரசியல்வாதிகள் நம்மை ஏமாற்றியிருக் கிறார்கள் என்றால், அதற்கு அவர்களை அனுமதித்தது நாம்தான். ஒரு நாகரிக சமுதாயத்தை ஒரு தலைவன் உருவாக்கத் தவறிவிட்டான் என்று சொல்ல முற்பட்டால், நாகரிக சமுதாயம் ஒரு நல்ல தலைவனை உருவாக்கவில்லை என்பதையும் சேர்த்தே சொல்ல வேண்டும். அரசியல் வாதிகள் சீரழிக்கிற விதத்தில், நமது பாராளுமன்ற ஜனநாயகம் தப் பாகவும், அபாயகரமானதாகவும் வடிவமைக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். குஜராத் மாதிரியான பெருந்தீயை உருவாக்கியிருப்பது இத்தகைய நடைமுறைதான். ரத்த நாளங்களில் தீப்பிடித்திருக்கிறது. உள் மருந்து கொடுத்து இதைத் தீர்க்க வேண்டும். பாசிசம் நமது கரையில் ஒதுங்கியிருப்பதற்கு அரசியல்வாதிகள் மூட்டிய மதக்கலவரங்கள் மட்டுமே காரணமல்ல.

கடந்த ஐம்பதாண்டுகளாக, நமது சாதாரண குடிமகனின் எளிய எதிர்பார்ப்புகளான சுயகௌரவத்தையும், பாதுகாப்பையும், ஏழ்மையி லிருந்து மீள்கிற அவகாசத்தையும் கூட நமது நிறுவனங்கள் நிர்தாட்சண்ய மாக மறுத்து வந்துள்ளன. நமது ஒவ்வொரு ஜனநாயக நிறுவனத்திற்கும், எளிய மனிதனுக்குப் பதில் கூறத் தேவையில்லாத, நெருங்க இயலாத உயர் பீடத் தன்மையை சமூக நீதியின் பெயரால் தந்திருக்கிறோம். உண்மையான சமூகக் கவலைகள் குறித்து இவற்றிற்குச் செயல்பட முடியவில்லையா, விருப்பமில்லையா? சமூக மாற்றத்திற்கான எந்தவொரு திட்டத்திலும், நிலச்சீர்திருத்தம், கல்வி, பொதுச்சுகாதாரம், இயற்கை வளங்களைப் பார பட்சமின்றி விநியோகித்தல், இப்படி எந்தவொரு திட்டத்திற்குள்ளும் புத்திசாலித்தனமாகவும், சூழ்ச்சியோடும் நமது ஜாதிமயமான அரசியல் உள்ளே நுழைந்து செயலற்றுப்போக வைத்திருக்கின்றன. கடைசியாக தற்போது உலகமயமாக்கம், ஏற்கனவே போலித்தனங்களில் கட்டுண் டிருக்கும் நம் சமுதாயத்தை, கலாச்சார ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் கிழித்தெறிய ஆரம்பித்துள்ளது.

●

இங்கே, இந்த இடத்தில் ஒரு நிஜமான துயரம் இருக்கிறது. பாசிஸ்டுகள் அதை உருவாக்கவில்லை. ஆனால் அவர்கள் இதன்மீது பாய்ந்து, தலை கீழாகத் திருப்பிப்போட்டு, இதிலிருந்து ஒரு அசிங்கமான, பெருமித உணர்வை உருவாக்கி வருகிறார்கள். மதம் என்கிற ஒரு மலினமான உத்தியைக் கொண்டு, மக்களைத் திரட்டி வருகின்றனர். தங்களது வாழ் வின் மீது எல்லாக் கட்டுப்பாட்டையும் இழந்தவர்களையும், தமது வீடுகளி லிருந்தும், சமூகத்திலிருந்தும் தூக்கியெறியப்பட்டு, தமது கலாச்சாரத் தையும் மொழியையும் இழந்தவர்களையும் திரட்டி அவர்களை ஏதோ ஒன்றிற்காகப் பெருமிதப்பட வைக்கிறார்கள். இந்த 'ஏதோ ஒன்று' என்பது இவர்கள் முனைந்து போராடி அடைந்த ஒன்றுமல்ல; தனிப்பட்ட முறை யில் வென்றெடுத்த ஒன்றுமல்ல. ஏதோ தானாகவே நிகழ்ந்திருப்பது. மேலும் துல்லியமாகச் சொன்னால், நிகழ்ந்திருக்க வேண்டியிராத நிகழ்வு. இந்தப் போலியான, காலியான பெருமித உணர்வோடு இவர்கள் பண்டைய கிரேக்க ஆம்ஃபி தியேட்டர்களில் மிருகத்தைக் குத்திக் கொல்கிற வீரனுக்கு உருவேற்றப்படுகிற வெறியுணர்வைப் போன்று, இந்தப் பாசிஸ்டுகளால் உருவாக்கப்பட்டிருக்கிற இலக்கை நோக்கிச் செலுத்தப் பயிற்றுவிக்கப்படுகிறார்கள்.

நமது சமூகத்தில் இருக்கிற இரண்டாவது ஏழ்மையான இனத்தை அழிக்க, முதல்நிலை ஏழ்மையாளர்களான தலித்துகளையும், ஆதிவாசி களையும் காலாட்படைகளாக மாற்றிப் போராடவைத்திருக்கும் அவலத்தை எப்படி உங்களால் விளக்கமுடியும்? ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உயர் சாதியாளர்களால் விலக்கப்பட்டும், ஒடுக்கப்பட்டும், வெறுத்து ஒதுக்கப் பட்டும், மோசமாக நடத்தப்பட்டும் வந்த குஜராத்தின் தலித்துகள், அதே உயர்குடி மக்களோடு கை சேர்த்துக் கொண்டு, தங்களைவிட வசதியில் மிகச் சிறிய அளவே உயர்ந்திருக்கிற முஸ்லீம்களுக்கெதிரான கலவரத்தில் ஏன் ஈடுபட்டார்கள்? இதை எப்படி உங்களால் விளக்க முடியும்? வெறும் கூலிப்படைகளா, வாடகைக் கொலைகாரர்களா இவர்கள்? தாங்கள் செய்வது பிழையென்று அறியாமல் செய்யப்படுகிற தவறுகள் இவை யென்றும், இவர்கள் செய்த காரியங்களுக்கு இவர்கள் பொறுப்பில்லை என்றும் சொல்லி அரவணைத்துக் கொள்ளலாமா? அல்லது இவற்றை யெல்லாம் சரியாகப் புரிந்துகொள்ள என்னால்தான் முடியவில்லையா? கடைக்கோடியில் இருக்கிற ஏழைகளுக்கு உச்சத்தில் இருக்கிற இவர்களின் உண்மையான எதிரி நெருங்க முடியாமலும், வெல்ல முடியாதவனாகவும் இருப்பதால், அவர்களது வெறி, கோபம் எல்லாம் தங்களுக்கு அடுத்த நிலையில் இருக்கிறவன் மீதுதான் காட்டமுடிகிறது என்பதுதான் ஒரு வேளை சரியான காரணமோ? அல்லது இவர்களது தலைவர்களெல்லாம்

மதி கெட்டுப்போய் உலகளாவிய இந்துத்துவத்தில் அனைவரையும் அர வணைக்க அறைகூவல் விட்டிருப்பதால் தானோ? (இந்த உலகளாவிய இந்து சாம்ராஜ்யம் என்பது, உலகப்போருக்கு முன்னால் பாசிசம் முன் வைத்த பண்டைய ரோமாபுரி ராஜ்ஜியக் கனவு போன்றும், இஸ்லாமிய சுல்தானேட்டை உருவாக்குகிற கனவு போன்றும் ஒரு பொய் இலக்குதான்).

பதிமூன்று கோடி முஸ்லீம் மக்கள் இந்தியாவில் வாழ்கிறார்கள். இந்து பாசிசவாதிகள் இவர்களை உரிமையோடு தீனியாக்கிவிடலாம் என கருது கிறார்கள். மோடி, பால் தாக்கரே போன்றவர்கள், தாங்கள் இது மாதிரி வேட்டையில் ஈடுபடுகிற போதெல்லாம், உலகம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் என நினைக்கிறார்களா? ஐரோப்பிய யூனியனும், மேலும் பல நாடுகளும் குஜராத் சம்பவங்களை கடுமையாகக் கண்டித்துள்ளன. இவற்றை நாஜி அரசாட்சியுடன் ஒப்பிட்டிருக்கின்றன. இதற்கு இந்திய அரசு எரிச்சலோடு 'அயல்நாட்டவர்கள் இந்தியாவின் உள்நாட்டு விஷயங்கள் குறித்து இந்திய மீடியாவில் கருத்து தெரிவிக்கக் கூடாது' என்று பதில் அளித்திருக்கிறது. இதற்கு அடுத்து என்ன? சென்சார்ஷிப்பா? இணையத்தை மூடிவிடப் போகிறார்களா? அயல்நாட்டுத் தொலைபேசி அழைப்புகளைத் தடுக்கப் போகிறார்களா? அல்லது தப்பான 'பயங்கர வாதிகளைக் கொன்று டிஎன்.ஏ. சாம்பிள் தயாரிக்கப் போகிறார்களா? அரசு சார்ந்த பயங்கரவாதம் மாதிரியான பயங்கரவாதம் வேறேதும் இல்லை.

இவர்களை யார் எதிர்த்து நிற்கப் போகிறார்கள்? ஒருவேளை இவர் களது பாசிச பொய் வாதங்கள், உக்கிரத்தோடு செயல்படுகிற எதிர்க்கட்சி களால் முறியடிக்கப்படலாம். இதுவரை பீகாரின் லல்லு பிரசாத் யாதவ் மட்டுமே இந்த விஷயத்தில், உண்மையான சொரணையோடும் உணர்ச்சிக் கொந்தளிப்போடும் எதிர்த்திருக்கிறார்: "எந்தத் தாயோட மகன் இந்த நாட்டை இந்துக்களின் நாடு என்று சொன்னவன்? அனுப்புங்கள் அவனை இங்கே; அவனை நார் நாராகக் கிழித்தெறிகிறேன்!"

பாசிசத்தைக் கண்டு இந்த அளவுக்குக் கோபப்படுபவர்கள், தாங்கள் உணர்ச்சிவசப்படுகிற அளவிற்கு சமுதாய நீதியின் மேல் அக்கறையும் வைத்திருந்தால் பாசிசத்தை திரும்பி ஓடச் செய்யலாம்.

நாம் புறப்படத் தயாராக இருக்கிறோமா?

பல லட்சக்கணக்கான நாம், வெறும் சாலை ஊர்வலங்கள் மட்டும் செல்லாமல், வேலை பார்க்கும் இடங்களிலும், பள்ளிகளிலும், நமது வீட்டிலும், நாம் எடுக்கிற ஒவ்வொரு முடிவிலும் இதற்கெதிராக இருக்கிறோமா?

அல்லது இன்னும் இல்லையா?

இல்லை என்றால், இன்னும் சில ஆண்டுகள் கழிந்த பிறகு, உலகின் மற்ற நாடுகள் நம்மை வெறுத்து ஒதுக்கிவைத்த பிறகு (என்ன தப்பு அதில்?) ஹிட்லருடைய ஜெர்மனியின் சாதாரணக் குடிமகனைப்போல நாமும் நமது சக மனிதனின் வெறுப்புத் தோய்ந்த பார்வையை சந்திக்கப் பழகிக் கொள்ள வேண்டும். நாம் செய்திருக்கிற, செய்யத் தவறிய காரியங் களினால் வெட்கப்பட்டு நமது குழந்தைகளின் கண்களை நேருக்கு நேராகப் பார்க்கக் கூசிக் குறுக வேண்டிவரும். நிகழ்ந்தவற்றை நாம் அனுமதித்ததற்காக வெட்கப்பட வேண்டியிருக்கும்.

இதுதான் நாம். இந்தியாவிற்குள் இருக்கும் நாம். நெடிய இராக் காலத்தை நாம் கடந்து செல்வதற்கு சொர்க்கத்தின் சக்திகள் நமக்கு உதவட்டும்.

●



அகமதாபாத் கலவரங்களின்போது காப்பாற்றும்படி
மன்றாடும் குதுபுதின் நசிருதின்.